they cannot interfere. I shall put one simple question. Suppose a fire breaks out in that area. Will the Government or the Corporation say that they would not put it out simply because it has happened on a private land? It would be inhuman to keep quiet in such circumstances. So, here also it is inhuman to keep the people in such a miserable condition. Let the Government at least amend or change the rules. If they could not do so, let them at least not allow people to build huts on private lands and thus create a slum area. They cannot say that simply because they have constructed huts on a private land, they would not help and that they must die. I want the Government to take up this matter seriously and take the necessary steps. Thank you, Sir.

* **SRI M. SUBRAMANIA KARAYALAR** : கனம் தலைவர் அவர்களே, கவர்னர் அவர்களின் உரையை நான் மகிழ்ச்சியுடன் வரவேற்கிறேன். நில உடைமைக்கு வரம்பு கட்டும் வகையிலே ஒரு சட்டம் இயற்றப்படவிருக்கிறது. இது எல்லோரும் வரவேற்கக் கூடிய விஷயம். அந்த வரம்பை சர்க்கார் எப்படி வகுக்கப் போகிறார்கள் என்பதுதான் இப்போது முக்கிய பிரச்னையாக இருக்கிறது. நிலங்களைக் கூட்டுறவுப் பண்ணைகளாக அமைப்பதாகவும் சில்லறை நிலங்களாகப் பிரிப்பதாகவும் சில பிரச்னைகள் இருக்கின்றன. நான் சில வருஷங்களுக்கு முன் திருவிதாங்கூர் சமஸ்தானத்தில் "க்ரோ மோர் பூட்" கமிட்டியில் அங்கத்தினராக இருந்தேன். அப்போது, நிலமில்லாதவர்களுக்கு நிலம் கொடுக்க வேண்டுமென்றும், கூட்டுறவு சொஸைடிகளுக்கு நிலம் கொடுக்க வேண்டுமென்றும் அங்கே தீர்மானிக்கப்பட்டிருந்தது. அங்கே கூட்டுறவு சொஸைடிகள் எப்படி இருந்தன என்று விளக்க விரும்புகிறேன். ஒரு குடும்பத்தில் எல்லோருமே கூட்டுறவு சொஸைடியில் அங்கத்தினர்களாக இருந்தார்கள். தாய், தந்தை, மகள், குழந்தை—இரண்டு வயதுக் குழந்தை கூட—ஆகிய அத்தனை பேரும் கூட்டுறவு சொஸைடியில் அங்கத்தினர்களாக இருந்தார்கள். அப்படிப்பட்ட மெம்பர்களுக்கு நிலங்கள் கொடுக்கப்பட்டன. அங்கே, ஒரு குடும்பத்திற்கு 3 எக்கர் வீதம் அவர்களுக்கு நிலங்களைக் கொடுக்க வேண்டும் என்ற விதி இருந்தது. நாங்கள் மூன்று எக்கர்கள் வீதம் கொடுத்தோம். ஆனால், சில வருடங்களுக்குள் இந்த நிலங்களெல்லாம் சில நபர்கள் கையில் சிக்கிக் கொண்டன. ஏனெனில், கொஞ்சங் கொஞ்சமாக நிலம் கொடுக்கும் போது, அவர்களுக்கு அந்த நிலங்களைப் பயிர் செய்ய வசதியில்லாததால்
5-10 p.m. அவைகளைப் பெரிய பணக்காரர்களுக்கு விலைக்குக் கொடுத்துவிட்டு அவர்கள் கீழ் வேலை ஆட்களாக இருந்தார்கள். ஆகவே, இந்த வரம்பு வகுப்பதில் எச்சரிக்கையாக இருந்து அதை நல்ல முறையில் செய்ய வேண்டுமென்று கேட்டுக்கொள்கிறேன்.

அடுத்தபடியாக, இப்பொழுது சென்னை, மைசூர், ஆந்திரா, கேரளம் இவைகளைச் சேர்த்து "சதர்ண் ஸோண்" என்று சொல்லப்படுகிறது. இது, உணவுப் பொருள்கள் சம்பந்தப்பட்ட வரையிலும்தானா அல்லது இதர காரியங்களுக்கும் பொருந்துமா என்று தெரியவில்லை. ஸ்டேட் ரீஆர்கனைஸேஷன் ரிப்போர்ட்படி, தாலுகா அடிப்படையில்தான் பிரிக்க வேண்டுமென்று இருந்தது. ஆனால், எங்கள் துரதிருஷ்டவசம் காரணமாக, செங்கோட்டை தாலுகா துண்டிக்கப்பட்டது. அப்படித் துண்டிக்கப்பட்டதால், நல்ல வளம் பொருந்திய நிலங்கள் எல்லாம் கேரளாவோடு சேர்ந்துவிட்டன. டீ எஸ்டேட், ரப்பர் எஸ்டேட், நல்ல வனங்கள் இவைகளெல்லாம் கேரளாவிற்குப் போய்விட்டன. அங்கு பல நதிகள் இருக்கின்றன. அவற்றில் முக்கியமானவை, புனலூர் ஆறு, அச்சன்கோவில் ஆறு என்பவைகளாகும். புனலூராற்றை சுமார் 40 வருடங்களுக்கு முன்பு, வண்டல்ஒடை என்ற விடத்தில் ஒரு அணை கட்டி சுரங்கம் வழி இப்புறம் கொண்டுவந்தால், இப்பொழுது அணை கட்டப்போகிற இடத்திலிருந்து செங்கோட்டைத் தாலுகா முழுவதற்கும் தண்ணீர் கிடைக்கும் என்று இருந்தது. அங்கு விவசாயம் செய்யும் நிலங்கள் கொஞ்சமாக இருந்ததால், அவ்வளவு செலவில் ஒரு

9th February 1959] [Sri M. Subramania Karayalar]

அணை கட்ட வேண்டுமா என்று அன்றிருந்த திருவிதாங்கூர் சர்க்கார் கொஞ்சம் ஆலோசித்தது. அந்த சமயத்தில் சென்னை பிரிட்டிஷ் சர்க்காரிடம் இருந்தது. பிரிட்டிஷ் சர்க்கார் சிரத்தை எடுத்திருந்தால், அந்த அணைக்கட்டுத் திட்டம் அப்பொழுதே வந்திருக்கும். ஆனால், அதைப்பற்றி அவர்கள் கவலைப்படவில்லை. ஆகவே, அந்தத் திட்டம் போய்விட்டது. இப்பொழுது அச்சன்கோவில் ஆறு இருக்கிறது. அந்த ஆற்றுத் தண்ணீரைச் சுரங்கங்கள் வழி கீழ்ப் புறமாகக் கொண்டுவந்தால் சங்கரன் கோவில் தாலூகா முழுவதற்கும் நீர்ப்பாசனத்திற்குச் சௌகரியமாக விருக்கும் என்று சொல்லிக்கொள்கிறேன். இந்த ஆற்றுத் தண்ணீர் எல்லாம் நமக்குப் பாத்யப்பட்டதாக இருந்தது. இப்பொழுது அந்தத் தண்ணீர் எல்லாம் கேரளாவிற்குப் போய்விட்டது. அதையாவது சென்னை சர்க்கார் முயற்சி செய்து வாங்கவேண்டுமென்று கேட்டுக்கொள்கிறேன்.

அடுத்தபடியாக, பம்பைத் திட்டம் இருக்கிறது. இது பூராவும் கேரள ராஜ்யத்திலுள்ளது. ஆனால், அதனால் அவர்களுக்கு எவ்விதப் பிரயோஜனமும் இல்லை. ஐம்பது வருடத் திட்டம் போட்டிருப்பதாகச் சொல்கிறார்கள். 100 வருடத் திட்டம் போட்டாலும், அதைக் கொண்டு அவர்களால் உணவுப் பொருள்கள் உற்பத்தி செய்ய முடியாது. ஆகவே, அந்தத் தண்ணீரை நமது சென்னை ராஜ்யத்திற்குக் கொண்டுவருவோமேயானால், ராமநாதபுரம், திருநெல்வேலி ஜில்லாக்களிலிருந்து ஏராளமான உணவு தான்யங்களை உற்பத்தி செய்து கேரள ராஜ்யத்திற்குக் கொடுக்க முடியும்.

அடுத்தாற்போல், சர்க்கார் ஊழியர்களின் விஷயம். சர்க்கார் ஊழியர்கள் என்று சொல்லும்போது, இங்குள்ள என். ஜீ. ஓ.க்களை மட்டும் கூறவில்லை. இன்று கன்னியாகுமரி ஜில்லா, செங்கோட்டை தாலூகா போன்றவிடங்களிலுள்ள சர்க்கார் ஊழியர்களின் நிலை எப்படியிருக்கிறது என்று பார்த்தால், இங்கு வேலை பார்க்கக்கூடியவர்கள் 40 ரூபாய் வாங்கிக்கொண்டிருந்தால், அதேவித வேலை செய்பவர்கள், கன்னியாகுமரி ஜில்லாவிலும், செங்கோட்டைத் தாலூகாவிலும் 30 ரூபாய்தான் வாங்குகிறார்கள். அதே சமயத்தில் இவர்களோடு வேலை பார்த்து வந்தவர்கள், கேரள ராஜ்ய சர்க்கார் ஊழியர்கள் இன்று 60 ரூபாய் வாங்குகிறார்கள். அப்படியிருந்தால் செங்கோட்டை, கன்னியாகுமரி போன்றவிடங்களில் இருக்கும் உத்தியோகஸ்தர்களின் மனம் எப்படிக் கொதிப்படையும் என்று ஆலோசித்துப் பாருங்கள். ஆகவே, சர்வீஸ் இன்டெக்ரேஷனைக் கூடிய சீக்கிரத்திலே செய்துகொடுக்க வேண்டும். அப்போதுதான் அங்குள்ள மக்களுக்கு நாம் நன்மை செய்து கொடுத்தவர்களாவோம்.

அடுத்தபடியாக, நான் சொல்ல விரும்புவது: சென்னையுடன் அவ்விடங்கள் இணைந்து இரண்டரை வருடங்களாகின்றன. ஆனால், இங்கு சென்னையில் செய்யப்படும் சட்டங்கள் அங்கு அமுலுக்கு வரவில்லை. நன்மையாக இருந்தாலும் சரி, தீமையாக இருந்தாலும் சரி, இங்குள்ள சட்டங்களை அங்கும் கூடிய சீக்கிரமே விஸ்தரிக்க வேண்டுமென்று சர்க்காரைக் கேட்டுக்கொள்கிறேன். இப்பொழுது சில சட்டங்கள் அங்கும் அமுலுக்கு வந்திருக்கின்றன. "ஸினிமாட்டோகிராப்" சட்டம் அங்கும் அமுலுக்கு வந்திருக்கிறது. ஆனால், அந்தச் சட்டப்படி இப்பொழுது அங்குள்ள எல்லாக் கொட்டகைகளையும் இடித்துக் கட்ட வேண்டுமென்று சொல்கிறார்கள். இந்தக் கொட்டகைகள் 20, 30 வருடங்களுக்கு முன்பு கட்டிய கொட்டகைகளாகும். அவைகள் அப்பொழுதிருந்த அரசாங்கச் சட்டத்தின்படி கட்டப்பட்டன. சென்னையில் எல்லாக் கொட்டகைகளும் இரும்பு சாமான்கள் போட்டுக் கட்டப்பட்டிருக்கின்றன. அங்கெல்லாம் மர சாமான்களால்தான் கட்டப்பட்டிருக்கின்றன. அப்பொழுது நீங்கள் பிரிட்டிஷ் ராஜ்யத்தின் கீழ் இருந்தீர்கள். அவர்களது சாமான்கள் விலைக்குப் போக வேண்டுமென்று ஒரு நிபந்தனை விதித்துச் சட்டம் இயற்றினார்கள். ஆனால், திருவிதாங்கூரில் அப்படியல்ல. அந்த நாட்டிலே கிடைக்கும் சாமான்களைக் கொண்டே கட்டிடம் கட்ட வேண்டுமென்று சொன்னார்கள். அப்படியிருக்க, இப்பொழுது சென்னைச் சட்டம் அங்கு அமுலுக்கு வந்ததும், அங்குள்ள கொட்டகைகளை இடித்து மாற்றிப் புதிதாகக் கட்ட வேண்டு

[Sri M. Subramania Karayalar] [9th February 1959

மென்று சொல்கிறார்கள். அது நடக்கக் கூடிய காரியமல்ல. ஆகவே இப்பொழுதுள்ள கொட்டகைகளுக்காவது " எக்ஸெம்ஷன் " கொடுக்க வேண்டுமென்று அரசாங்கத்தைக் கேட்டுக்கொள்கிறேன். இனிமேல் கட்டப் படுவதை உங்கள் இஷ்டம் போல் கட்டச் சொல்லுங்கள் என்றும் சொல்லிக் கொள்ள விரும்புகிறேன்.

5 20 p.m. அடுத்தபடியாக " ரிலிஜியஸ் எண்டோமெண்ட்ஸ் " பற்றி ஒரு சில வார்த்தைகள் கூற விரும்பகிறேன். இது திருநெல்வேலி ஜில்லாவில் சில இனத்தார் கையில்தான் இருந்துவருகிறது. எல்லா இனத்தாரும் அதில் பங்குகொள்ள வேண்டுமென்று நான் கேட்டுக்கொள்ளுகிறேன். அதுவு மல்லாமல், ஏற்கனவே திருவாங்கூர் சமஸ்தானத்தைச் சேர்ந்த கன்யா குமரி, செங்கோட்டை ஆகிய இடங்களில் இம்மாதிரி " எண்டோமெண்டு போர்டு " கிடையாது. ஆனால், தேவஸ்வம் போர்டு என்று ஒரு போர்டு இருந்து வந்தது. தேவஸ்வம் போர்டில் சட்ட சபையினால் தேர்ந்தெடுக் கப்பட்ட ஒரு மெம்பரும், மகாராஜாவினால் நியமிக்கப்பட்ட ஒரு மெம்பரும், " காபினெட் " டினால் நியமிக்கப்பட்ட ஒரு மெம்பரும் இருந்தார்கள். அவர்கள்தான் அந்த " போர்டை " நடத்திக்கொண்டிருந்தார்கள். இந்தப் பகுதிகள் " டிரான்ஸ்பர் " ஆகும்பொழுது இது விஷயமாக ஒரு ஒப்பந்தம் இருப்பதாகச் சொல்லுகிறார்கள். ஆனால், இது வரையில் அந்த போர்டு நியமிக்கப்பட்டதாகத் தெரியவில்லை. ஆகையால், அந்த போர்டைக் கூடிய சீக்கிரம் நியமித்து, முன்பு இருந்த மாதிரி அதே வழியில் நடத்த வேண்டுமென்று நான் கேட்டுக்கொள்ளுகிறேன்.

கடைசியாக, நான் சொல்ல விரும்புவது செங்கோட்டை வாடர்-வொர்க் ஸைப்பற்றி. செங்கோட்டைத் தாலுகா மலைக்குக் கீழ்ப்பக்கம் திரு வாங்கூருக்கு சம்பந்தப்பட்டது. இருபது வருஷங்களுக்கு முன்பே தென்காசி யிலிருந்து தொத்து வியாதி அதிகமாகப் பரவுகிறது, தண்ணீர் மூலமாகத் தொத்து வியாதி பரவுகிறது என்று கருதி, அப்பொழுதே சர்க்கார் செங் கோட்டைக்கு உடனடியாக வாடர்-வொர்க்ஸ் ஏற்படுத்திக் கொடுக்கவேண்டு மென்று தீர்மானித்து அந்த வேலையையும் ஆரம்பித்தார்கள். அப் பொழுது வர்களுக்கு அந்தக் கடனைத் திருப்பிக் கொடுக்க சக்தி இருக்குமா என்ற பிரச்னையைக் கவனிக்கவில்லை. அதைப்பற்றிக் கவனிக்காமலேயே வாடர்-வொர்க்ஸை ஏற்படுத்திக் தந்தார்கள். அது 20 வருஷங்களாக நல்ல முறையில் நடந்துவருகிறது. முன்காலத்தில் திருவாங்கூர் சமஸ் தானத்தில் சேர்ந்திருந்தபொழுது, வாடர்-வொர்க்ஸ் டிபார்ட்மெண்டு என்று தனியாக ஒரு இலாகா இருந்தது. அவர்கள் இந்த வாடர்- வொர்க்ஸைக் கண்காணித்து வந்தார்கள். இப்பொழுது அந்தப் பிரதேசம் இங்கே வந்த பிற்பாடு, இது பி. டபிள்யூ. டி.-இல் சேர்க்கப்பட்டிருக்கிறது. ஸானிடரி என்ஜினியருக்கும் அதற்கும் சம்பந்தமில்லை. இப்பொழுது தண்ணீர் சப்ளை சரியாக இல்லை. அதிலும் " ப்ரொடெக்டட் வாடர்-சப்ளை " கிடையாது. " குளோரினேஷன் " என்பது கிடையாது. வெறும் தண்ணீர் "பம்பில்" அடித்து வருகிறது. அதுவும் சில காலங்களில் மெஷின் தகராறு காரணமாகத் தண்ணீர் வருவது இல்லை. சரியான காலத்தில் மெஷின் ரிப்பேர் செய்யப்படுவதில்லை. நான்கு ஐந்து தினங்களுக்குக்கூட தண்ணீர் இல்லாமல் இருந்திருக்கிறது. அதனாலே வாடர்-வொர்க்ஸை இப்பொழுது சென்னை ராஜ்யத்தில் அமுலில் இருக்கும் சட்டப்படி முனிஸிபாலிடிக்குக் கொடுக்க வேண்டும். நான் நகர சபைத் தலைவர் என்கின்ற முறையிலே ரெவின்யூ அமைச்சர் அவர்களுக்கு இதுபற்றி எழுதியிருக்கிறேன். கூடிய சீக்கிரம் எங்கள் கையில் அதைக் கொடுக்க வேண்டுமென்று கேட்டுக் கொள்ளுகிறேன். முன் காலத்தில் எங்களுக்கு வாடர்-வொர்க்ஸைத் தந்த பொழுது செலவைப்பற்றி, அதாவது, " ரீபேயிங் கபாஸிடி ஆப் தி முனிஸிபாலிடி " என்பதைப்பற்றி ஒன்றும் கவலைப்படாமல் அவர்கள் இந்தத் தண்ணீர்த் திட்டத்தை ஏற்படுத்தினார்கள். ஆகையால், அந்தக் கடனைத் திருப்பிக் கொடுப்பதற்கு ஒருவிதமான வசதியும் இல்லாததினால். அந்தக் கடன் பூராவையும் வஜா செய்து வாடர் வொர்க்ஸை முனிஸி பாலிடிக்குக் கொடுக்க வேண்டுமென்று கேட்டுக்கொள்ளுகிறேன். முன்பு இதைப்பற்றி கனம் மந்திரி ஸ்ரீ பக்தவத்சலம் அவர்களிடம் [நேரில்

9th February 1959] [Sri M. Subramania Karayalar]

சொல்லியபொழுது, இது ஒரு சிறிய தொகைதான், அதை வ்ஜா செய்து விடலாம் என்று சொன்னார்கள். அதேமாதிரி, அதை வஜா செய்ய வேண்டுமென்று கேட்டுக்கொண்டு, என்னுடைய சிற்றுரையை முடித்துக்கொள்ளுகிறேன்.

* Dr. MAHOMED USMAN: Mr. Chairman, Sir, in supporting the Resolution moved thanking the Governor for his Address, I should like to express my views on one or two matters. First and foremost, I should like to say a few words about the ceiling on land holdings. Of course, there are two opinions now about the ceiling. The Government think that fixation of ceiling would benefit India and there are very intelligent people in India, men of imporance, who think that fixation of ceiling would do harm to the country. Therefore, it is very difficult for one to judge whether ceiling is good or bad. Time alone will decide whether fixation of ceiling will benefit our country or not. The difficulty about ceiling is, the land is fragmented and it does not come up to the expectation which the Government have about ceiling in increasing the production and it may be an irreparable loss. For several years to come, it will be very difficult for land to produce and agriculture to improve. Therefore, the Government will be very, very cautious about that. Let them try it in one or two districts and see how it works. If it does not work properly, I think they should give it up. There is no use of continuing the experiment. Co-operative farming, no doubt, is necessary. But our people are so conservative that I do not know whether they will take to it easily. If they do not take to it easily, the difficulty will be that the whole thing is a failure. And when agriculture which is the biggest industry of the land fails, just think of the confusion and the famine conditions that will face the country. Therefore, I want the Government to be very, very careful in this matter. They may try it in one or two districts and see how it works, just as they did in regard to Prohibition. I think no doubt it is good if it succeeds. If it does not succeed, it will ruin the country. Therefore, they should remember this and try to move very, very cautiously.

The second thing is about the pay structure of the Non-Gazetted servants. Even in the Central Government when the Postal Department people were paid a little less than the railwaymen, there was always heart-burning. When I was a Member of the Government of Madras, even in those days here the Non-Gazetted servants always felt that they did the same work as other people did in the Central Government, but that still their pay was less. There was always heart-burning. No question can be solved if it is not properly solved. The proper way of solving the question is to see that people who serve whether in the Madras Government or in the Central Government get the same pay. Of course, it will cost you more and you cannot afford it. But you can apply this principle by coming to an agreement with the Government of India for future entrants. At least the Government of India may give some money in order to give our men a little more salary. Of course, it will be very hard for the Government of India to go

[Dr. Mahomed Usman] [9th February 1959

on increasing the salaries of their own servants in the Central Government. If they come to an understanding with the State Governments saying that in regard to future entrants, there may be a scale which will perhaps be the same scale or intermediate to the Central Government scale, then it may be all right. I think that unless it is done, it will always lead to heart-burning. After all, we should remember Government servants who serve in the State Government serve India as well as those who serve in the Central Government. Therefore, people who do the same kind of work must get the same amount of pay. A man working in the Secretariat must get the same pay as one in the Revenue Board or in the office of the Inspector-General of Police gets. I know even in the Madras Government there are different scales of pay for various officers. All these differences should be removed. I think you will very easily solve this problem when you have got the same scale of pay for doing the same work, whether the man does that work in the Central Government or in the State Government. I think for that you require the co-operation and help of the Government of India and this Government should make a strong representation to the Government of India that they should solve this question. I know of a case of two persons of about the same age, one serving in our Secretariat and the other serving in the Post Office. The latter gets about Rs. 20 or Rs. 30 more than the former. Of course, there is heart-burning. A gardener in the Government of India gets about Rs. 80. Of course, we cannot afford to pay Rs. 80 to our gardeners. But at least in regard to future entrants, there must be some understanding with the Government of India that there should be same scales of pay for both the Central Government and the State Government servants. That will solve the question and bring about contentment amongst the Non-Gazetted servants and menial staff. I hope the Government will take every step possible to see that this question is properly solved.

With these few words, I support the Resolution.

5-30 p.m. **Sri N. ANNAMALAI PILLAI** : கனம் சேர்மென் அவர்களே, இன்றைய தினம் கவர்னர் அவர்களுடைய பிரசங்கத்தைக் குறித்து ஆரம்பிக்கப்பட்டுள்ள விவாதத்தில் சில வார்த்தைகளைச் சொல்ல ஆசைப்படுகிறேன். மேன்மை தங்கிய கவர்னர் பெருமான் அவர்கள் நமது நாட்டில் நடந்த நிர்வாகத்தைப்பற்றி மிகவும் பெருமிதத்துடன் பேசியுள்ளார். அந்தப் பேச்சானது நமக்கு மிகவும் திருப்தி அளிக்கிறது. நமது நிர்வாகம் பல துறைகளில் முன்னேறி வருகிறது. அவைகளையெல்லாம் இதில் குறிப்பிடவில்லையென்றாலும், கவர்னர் அவர்கள் சிறிய கைத்தொழில்களைப் பற்றியும் டெவலப்மெண்ட் ஸ்கீம்களைப்பற்றியும் அவைகள் எல்லாம் நன்றாக நடந்திருக்கின்றன என்று தெரிவித்திருக்கிறார்கள். மற்றொன்று நல்ல சுப சகுனமாக மலையாளத்தில் இருக்கின்ற நீர்த் தேக்கத்திற்குக் கேரள அரசாங்கத்துடன் சென்னை அரசாங்கமும் கலந்து பேசி ஒரு முடிவுக்கு வந்து நமக்குத் தண்ணீர் கொடுக்க ஏற்பாடு செய்திருப்பதாகத் தெரிவித்திருக்கின்றார்கள். அதுவும் நமக்கு மிகவும் திருப்தியைத் தரக்கூடிய விஷயமாகும். மற்றொன்று கூட்டுறவு சங்கங்களைப்பற்றி சகஜமாக ஒன்றிரண்டு இடங்களில் குறிப்பிட்டிருக்கிறார்கள். பல காரியங்களும் ஸொஸைட்டிகள் மூலமாக நடந்திருப்பதாகச் சொல்லியுள்ளார்கள். இவ்விதம் சொல்லியிருப்பது சந்தோஷத்திற்குரிய விஷயம்தான். ஆனால், பழைய வெள்ளைக்கார ஆட்சி காலத்தில் அவர்களால் நிறைவேற்றி வைக்கப்பட்ட

9th February 1959] [Sri N. Annamalai Pillai]

சட்டங்கள்தான் இப்போதும் கூட்டுறவு ஸொஸைட்டிகள் சம்பந்தமாக இருக்கின்றன. அவைகளை மாற்றியமைத்தால், நமது நாட்டுக்குக் கூட்டுறவு ஸொஸைட்டிகள் பயன்படும் என்று நினைக்கிறேன்.

**(Deputy Chairman in the Chair.)**

சிலர் கோவாப்பரேடிவ் ஸொஸைட்டியில் நுழைந்துவிடுகிறார்கள். அவ்விதம் நுழைந்துவிட்ட பிறகு, அவர்களே பல்லாண்டு பல்லாண்டு வாழ வேண்டும் என்று சொல்லுவார்களே, அதே முறையில் பல்லாண்டு பல்லாண்டு காலமாக உள்ளேயே இருந்துவிடுகிறார்கள். அவர்களை யாரும் அசைக்க முடியாத நிலையில் உள்ளே இருந்துவிடுகிறார்கள். சர்க்காரில்கூட சில உத்தியோகங்களில் மூன்று வருஷ காலம்தான் இருக்கலாம் என்றிருக்கிறது. சட்ட சபையில் கூட ஐந்து வருட காலம்தான் பதவி வகிக்கலாம் என்றிருக்கிறது. ஆனால், இந்த ஸொஸைட்டிகளில் இருப்பவர்களுக்குக் கால வரம்பே கிடையாது. காரணம், பணத்தைப் பொறுத்த விஷயமாக இருப்பதால், பணத்தைப் பாதுகாப்பதற்கு நம்பிக்கையான ஆள் வேண்டியிருக்கிறது என்று சொல்லி விடுகிறார்கள். ஆனால், இம்மாதிரிப்பட்ட ஆட்கள் செத்துவிட்டால் என்ன செய்வார்கள் என்று யாரும் யோசிப்பதில்லை. அவ்விதம் இப்போது இருக்கிறவர்கள் போய்விட்டால், வேறு ஆட்கள் வந்து இந்த ஸொஸைட்டிகளை நடத்த முடியாதா ? கண்டிப்பாக நடத்த முடியும். இவர்கள் எல்லாம் மனித சமூகத்திற்கு அப்பாற்பட்டவர்களா ? அல்லது தேவ புருஷர்களா ? ஒன்றுமில்லை. யார் வந்தாலும் இந்தமாதிரியான ஸொஸைட்டிகளைத் திறமையாக நடத்த முடியும். ஆகவே, இதில் இருக்கின்ற பழைய சட்டங்களையெல்லாம் மாற்றியமைக்க வேண்டும் என்று கேட்டுக்கொள்கிறேன். ஒரு ஸொஸைட்டியில் உள்ளே நுழைந்துவிட்டால் அவர்கள் வெளியில் போகாமல் இருப்பதற்கும் ஏதாவது ஒரு " பைலா " வை பாஸ் செய்துவிட்டால் போதும் என்று சொல்லிக்கொண்டு நீண்ட காலம் இருந்துவிடுகிறார்கள். இதனால் மற்றவர்கள் உள்ளே வருவதற்கு வழியில்லாமல் போய்விடுகிறது. அப்படியே தட்டுத்தடுமாறி உள்ளே வந்து விட்டாலும், ஏற்கெனவே இருக்கின்றவர்கள் அந்தரங்கமாக ஒரு கூட்டத்தைப் போட்டு இந்த சபையில் இருக்கின்றவர்கள் லாயக்கில்லை என்று தீர்மானித்து மற்றவர்களை வெளியில் தள்ளிவிடுகிறார்கள். இப்படி ஒரு ராஜ்யத்தில் இருக்கின்ற ஒரு கிளை ஸ்தாபனத்தை ஒரு கூட்டத்தாருக்கு மட்டும் விட்டுக் கொடுத்துவிடுவது என்பது தர்மமல்ல, நியாயமல்ல என்பதைத் தெரிவித்துக்கொண்டு இந்தமாதிரியான முறைகளை மாற்றியமைக்க வேண்டும் என்று கேட்டுக்கொள்கிறேன்.

அடுத்தபடியாக, நமது அரசாங்கம் சாத்தனூர் என்ற ஒரு அணையைக் கட்டியிருக்கிறார்கள். அதிலிருந்து 20 ஆயிரம் எக்கர்களுக்குத் தண்ணீர் பாயும் என்று சொல்லியிருக்கிறார்கள். இப்போது கிட்டத்தட்ட 12 அல்லது 13 ஆயிரம் எக்கர்களுக்குத் தண்ணீர் விட்டிருக்கிறார்கள். இப்போது தண்ணீர் பாய ஆரம்பித்ததோ இல்லையோ, இதற்குள்ள பணத்தைப் பூராவும் கட்ட வேண்டுமென்று மக்களை வற்புறுத்திக் கொண்டிருக்கிறார்கள். இவ்விதம் வற்புறுத்தப்படுவதை ஒத்தி வைக்க வேண்டுமென்று கேட்டுக்கொள்கிறேன். இதற்கு முன்னால் லோயர் பவானித் திட்டம் நடைமுறையில் கொண்டுவரப்பட்டது. இதே போன்று பல ஊர்களில் அணை கட்டப்பட்டது. அதற்கெல்லாம் வசூல் செய்யப்பட வேண்டிய பணத்தை முதல் ஆண்டில் கால் பாகம் வசூல் செய்தார்கள். அதற்குப் பின்னால் அரை பாகம் வசூல் செய்தார்கள். அதன் பின்னால் முக்கால் பாகம் வசூல் செய்தார்கள். அதன் பின்னால் முழு பாகமும் வசூல் செய்தார்கள். ஆனால், இங்கு கட்டப்பட்டிருக்கும் சாத்தனூர் அணையினால் பயன் பெறுபவர்களிடமிருந்து பணம் கொடுக்கும்படியாக வற்புறுத்தப்படுகிறது. இவ்விதம் அங்குள்ள ஜனங்களைத் தொந்தரவு பண்ணுகிறார்கள். இதனால் அங்குள்ள மக்கள் வாடி வதங்குகிறார்கள். இப்போதுதான் அவர்கள் தண்ணீரை உபயோகப்படுத்துகிறார்கள். இது வரை வறட்சியாக, புஞ்சைப் பிரதேசமாக, கிடந்த நிலத்தில் தண்ணீர் விட்டுக் கலக்கி சேறுக்கி இரண்டு நாற்றை நட்டு, அது வளர்ந்து இரண்டு கதிரை வெளியில் காட்டி அதில் பத்து நெல்லும் காணப்படுகிறது. இந்த நிலைமையில் அவர்கள் பூராப் பணத்தையும் கொடுப்பதற்கு எங்கே

[Sri N. Annamalai Pillai] [9th February 1959

போவார்கள் ? ஆகவே, அவர்களிடமிருந்து முதல் வருடத்தில் கால் பங்கும், அதற்கு அடுத்த வருடத்தில் அரைப் பங்கும், அதற்கு அடுத்த வருடத்தில் முக்கால் பங்கும், அதற்கு அடுத்த வருடத்தில் முழுப் பங்கும் வசூலிக்க வேண்டும் என்று அரசாங்கத்தினிடத்தில் கேட்டுக்கொள்கிறேன். மேலும், இந்த அணையின் மூலம் 20 ஆயிரம் ஏக்கர்கள் பயன் பெறும் என்று சொல்லப்பட்டிருக்கிறது. இதற்காகக் கால்வாய்கள் வெட்டப்பட்டிருக்கின்றன. இந்தக் கால்வாய்கள் வரும் இடங்களில் பல பள்ளத் தாக்குகள் இருக்கின்றன. அந்த இடங்களில் தண்ணீர் போவதைத் தடுத்து விடுகிறார்கள். சில இடங்களில் கசிவு ஏற்பட்டு அதன் மூலம் அந்தப் பள்ளத்தாக்கு இடங்களுக்குத் தண்ணீர் வசதி கிடைக்கிறது. இதன் மூலம் அந்த இடங்களில் அங்குள்ளவர்களுக்குப் பயிரிடுவதற்கு வசதி ஏற்பட்டிருக்கிறது. ஆகவே, இதைப்பற்றியும் அரசாங்கம் கவனிக்க வேண்டும் என்று கேட்டுக்கொள்கிறேன்.

அடுத்தபடியாக, நம் நாட்டில் அனேகம் மைனர் காடுகள் இருக்கின்றன. அந்தக் காடுகளிலெல்லாம் ஓணான், உடும்பு போன்றவைகள் கூட இருக்க முடியாது. கரடி, யானை போன்ற கொடிய மிருகங்கள் வாழக்கூடிய காடுகள் வேறு இருக்கின்றன. இந்தக் காடுகள் அப்படிப்பட்டவையும் அல்ல. இந்தக் காடுகளில் " பாரஸ்ட் " காரர்கள் ஒருவிதமான செடியையும் நட்டு வளர்க்கிறார்கள். அதோடு புளியஞ் செடியையும் நட்டு வளர்க்கிறார்கள். இதற்காகத் தண்ணீர் ஊற்றப்படுகிறது. தண்ணீர் தட்டுப்பாடு ஏற்பட்டவுடன் தண்ணீர் ஊற்றுவதை " பாரஸ்ட் " காரர்கள் நிறுத்திவிடுகிறார்கள். இதனால் அந்தச் செடிகளெல்லாம் காய்ந்து போகின்றன. இதன் காரணமாக சர்க்காருக்கு நஷ்டம் ஏற்படுகிறது. " பாரஸ்ட் " காரர்கள் சரியான விதத்தில் அதைப் பார்ப்பதில்லை, தங்களை மாத்திரம் அவர்கள் சரியானபடி பார்த்துக்கொள்கிறார்கள். ஆகவே, இதைக் கவனித்து நல்ல முறையில் சீர்திருத்தம் செய்ய வேண்டும் என்று கேட்டுக்கொள்கிறேன். இந்தக் காடுகளையெல்லாம் அங்கிருக்கின்ற இருளர், மறவர் ஆகியவர்களுக்குப் பயிரிடுவதற்குக் கொடுக்க வேண்டும் என்று கேட்டுக்கொள்கிறேன். இல்லையென்றால், இந்த மாதிரிக் காடுகள் வளர்க்கிறோம் என்று சொல்லுகிற திட்டம் ஒரு சிலருக்கு மாத்திரம்தான், அல்லது ஒரு சில கூட்டத்தாருக்கு மாத்திரம்தான் உதவுவதாக இருக்குமேயல்லாது, இதனால் பொது ஜனங்களுக்கு எந்த
5-40 p.m. விதமான பயனும் கிடைக்காது என்பதைத் தெரிவித்துக்கொள்கிறேன். ஓணான், உடும்பு தங்கக்கூடிய சிறிய சிறிய காடுகளை, சிறிய சிறிய செடிகளும் முட் புதர்களும் இருக்கும் காடுகளையெல்லாம் அழித்துவிட்டு, அவைகளைப் பிரித்து நரிக் குறவர்கள், இருளர்கள் போன்றவர்களுக்குப் பயிரிடுவதற்கு வசதி செய்து கொடுக்க வேண்டுமென்று நான் கேட்டுக்கொள்ளுகின்றேன். இந்தப் பேருபகாரத்தை சர்க்கார் செய்வார்களானால், அவர்கள் " கார் உள்ள அளவும், என் பெயர் உள்ள அளவும் புகழ் நிலைத்து நிற்கும் " என்று ராமச்சந்திரன் சொன்னதுபோல், இந்த அரசாங்கத்தாருடைய பெயர் சாஸ்வதமாக, உலகம் உள்ள வரையில் நிலைத்து நிற்கும் ; மக்கள் அவர்களைப் போற்றுவார்கள். இப்போதே போற்றுகிறார்கள். காரணம் என்னவென்றால், 150 வருஷம் இந்த ராஜ்யத்தைப் பிரிட்டிஷார் ஆண்டார்கள். அந்த 150 வருஷங்களிலே, அவர்கள் இந்த நாட்டில் ஒரு வேலையும் செய்யாமல், குறிப்பாக சாத்தனூர் அணையை 1904–ம் வருஷத்திலே அன்னிய நாட்டினர் அணை கட்டலாம் என்று அங்கு போய்ப் பார்த்து, அதற்கு வேண்டிய சர்வே எல்லாம் செய்து வைத்தார்கள். அதை இப்பொழுது நாம் செய்து முடித்து விட்டோம். வட்டி கிடைக்கிறதோ இல்லையோ, தண்ணீரைத் தேக்கி வைப்போம், மழை பெய்து தண்ணீர் வரும்போது தேக்கி வைப்போம், அது பிரயோஜனப்படும் என்ற நல்ல எண்ணத்தினால், அந்தத் திட்டத்தை எடுத்து, அணையைக் கட்டிமுடித்தாய்விட்டது. இப்பொழுது நம்மை உலகம் போற்றுகிறது ; மேல் நாடுகளிலே இருக்கிறவர்கள் எல்லாம் இவ்வளவு அழகாகக் காரியங்களைச் செய்கிறார்களே என்று நம்மைப் பார்த்துப் பிரமிக்கிறார்கள். இவ்வளவு வசதிகள் உள்ள இந்த நாட்டிற்கு ஒன்றும் செய்யாமல் ஏமாந்து விட்டுவிட்டோமே என்று அவர்கள் ஏங்குகிறார்கள் என்பதை இங்கே தெரிவித்துக்கொள்ளுகிறேன். ஆகையால், இந்த அரசாங்கம் நீடூழி வாழும். " இறந்தும் இறவார் ; இருந்தும் இறந்தார் " என்று இரண்டு வகை

9th February 1959] [Sri N. Annamalai Pillai]

மனிதர்கள் இருக்கிறார்கள். அந்தக் காடுகளையும் பயிர் செய்வதற்கு இந்த அரசாங்கம் ஒதுக்கிவிட்டார்களானால், இந்த நல்ல காரியம் செய்வார்களானால், இறவாதவர்களாக இருப்பார்கள். அதாவது, நீடூழி இருப்பார்கள். இந்த அரசாங்கம் நீடூழி இருக்கும் என்று தெரிவித்துக் கொள்கிறேன்.

அடுத்தபடியாக, தானியக் கொள்முதல் வியாபாரம் செய்யப்போவது பற்றி நாட்டிலே ஜனங்களிடத்தில் பெரிய பயங்கரம் ஏற்பட்டிருக்கிறது. முன்போல் அபாயம் வந்துவிடுமோ, என்ன கதி ஏற்படுமோ என்று அவர்கள் நடுங்கிக்கொண்டிருக்கிறார்கள். அதிலும் பாமரர்கள், இருளர், குறவன், நரிக்குறவன் இப்படிப்பட்ட ஜாதிகளெல்லாம் ஓரணா, அரையணா எங்காவது பிச்சையெடுத்து வந்தால், அதைக் கொண்டு கேழ்வரகு, கம்பு, அரிசி வாங்கிக் கஞ்சியாவது காய்ச்சிக் குடிப்பதற்கு வசதி இருந்தது. இப்பொழுது அரசாங்கம் செய்யவிருக்கின்ற இந்த வேலைத் திட்டத்திலே அரையணா, ஓரணாவுக்கு அரிசியோ, கம்போ, கேழ்வரகோ வாங்கி, வயிற்றைக் கழுவிக்கொண்டு உயிர் வாழ்வதற்கு முடியுமா, அல்லது வயிற்றிலே ஈரத் துணியைப் போட்டுக்கொண்டு முடங்கிக் கிடக்க வேண்டியதுதானா, என்று இந்தத் திட்டத்தைத் தீட்டும்போது யோசித்துப் பார்க்கக் கடமைப்பட்டிருக்கிறார்கள். அந்த ஏழைகளுக்கு ஏதாவது வழியை அரசாங்கம் திட்டமிடும்போது காணவேண்டும்.

தானியங்களைக் கொள்முதல் செய்வதனால், பணக்காரர்களுக்குச் சாதகமாக இருக்கும்; அவர்கள் சாப்பிடுவதற்கும் வழி வகை செய்ய முடியுமே தவிர, ஏழை ஜனங்களுக்குப் பயன்படாது. ஏழையைக் காப்பாற்ற வேண்டுமானால், சில சட்டங்களைத் திருத்தி அரசாங்கத்தார் ஜனங்களுக்கு, எங்கே போனாலும் அங்கே, ஓரணா, அரையணா கொடுத்தாலும் அரிசியோ, கேழ்வரகோ, கம்போ கிடைக்கக்கூடிய ஏற்பாடு கட்டாயமாக இருக்கவேண்டும். அதுதான் என்னுடைய கோரிக்கை. அப்படிக் கிடைக்கும்படியாக அரசாங்கத்தார் "ப்ரொக்யூர்மெண்ட்" திட்டத்தில் செய்தாலும் சரி தானியக் கொள்முதல் செய்தாலும் சரி, சர்க்காரே வியாபாரம் செய்தாலும், என்ன செய்தாலும், அரையணா, ஓரணாவுக்கும் அரிசி கிடைக்கும் படியாக ஏற்பாடு செய்ய வேண்டும் என்று நான் சர்க்காரைக் கேட்டுக் கொள்கிறேன்.

மொத்தத்தில், இந்த அரசாங்கம் செய்து வருகிற வேலை அபாரமானது. இந்த அரசாங்கத்தை உலகம் போற்றுகிறது. நானும் இந்த அரசாங்கத்தைப் போற்றுகிறேன்; பாராட்டுகிறேன். ஆனால், இன்னும் செய்ய வேண்டியது ஏராளமாக இருக்கிறது என்பதை இந்த அரசாங்கத்தார் மனதில் வைத்துக்கொண்டு, அந்த வேலைகளைப் பூர்த்தி செய்ய வேண்டுமென்று கேட்டுக்கொண்டு என்னுடைய வார்த்தையை இத்துடன் முடித்துக்கொள்ளுகின்றேன்.

* **SRIMATHI SARASWATHY PANDURANGAM**: கனம் உதவி சபாநாயகர் அவர்களே, கவர்னர் பெருமானுடைய உரையைப் பாராட்டுகிற முறையிலே, சில வார்த்தைகள் சொல்ல விரும்புகிறேன். நிலச் சீர்திருத்தத்தைப்பற்றிக் கவர்னர் உரையில் குறிப்பிடப்பட்டிருக்கிறது. காந்தீஜி அவர்கள் எதை நினைத்துச் சொல்லி மறைந்தார்களோ, அந்த நிலச் சீர்திருத்தத்தை இவ்வளவு விரைவிலே நம்முடைய சர்க்கார் கொண்டு வந்திருப்பதைக் குறித்து நான் முழுமனதுடன் பாராட்டுகிறேன்.

உணவுப் பிரச்னையைப்பற்றி எனக்கு முன்னால் பேசிய தலைவர் அவர்கள், அரையணா, ஓரணாவுக்கு அரிசி மக்களுக்குக் கிடைக்கக்கூடிய அளவுக்கு நிலைமை ஏற்பட வேண்டுமென்று சொன்னார்கள். வாஸ்தவம். மக்கள் கஷ்டம்தான் படுகிறார்கள் என்பது நம்முடைய அரசாங்கத்திற்கும் தெரியும். அதற்குத் தகுந்த திட்டங்களை வகுத்து, ஆங்காங்கு நியாய விலைக் கடைகளைத் திறப்பதற்கு ஏற்பாடு செய்கிறோம் என்ற குறிப்பு கவர்னர் பெருமானுடைய உரையிலேயே இருக்கிறது.

இன்றைய நிலைமைக்கு யார் பொறுப்பாளி என்று பார்க்கும்போது, நாம்தான் அதற்குப் பொறுப்பாளி என்றுதான் நான் சொல்லப் பிரியப்படுகிறேன். பல அணைக்கட்டுத் திட்டங்களை நன்றாக நிறைவேற்றுவதன் மூலம் உற்பத்தியைப் பெருக்குகின்ற அளவுக்கு நம்முடைய சர்க்கார் ஒரு

துளி நீரைக்கூட வீண் போகாமல் நல்ல பல அணைக்கட்டுகளைக் கட்டியிருக்கும்போது, ஏன் இவ்வளவு பஞ்சம் நமக்கு வந்திருக்கிறது ? உற்பத்தியாகின்ற நெல் தானியங்களின் அளவு முன்னைவிட இன்று அதிகரித்திருக்கிறதே, ஏன் இந்தக் கஷ்டம் என்று பார்க்கின்றபோது, நாம் தான் பொறுப்பாளிகள் என்று உணர வேண்டும். எப்படி நாம் பொறுப்பாளிகள் என்றால், நாம் எல்லோரும் கைக்குத்தல் அரிசியைச் சாப்பிடுவதில்லை. வாஸ்தவத்திலே ஒவ்வொருவரும் கைக்குத்தல் அரிசியையே வாங்கிச் சாப்பிடுவோமேயானால், கண்டிப்பாக ஒரு படி கைக்குத்தல் அரிசியை வைத்துக்கொண்டு எட்டுப்பேர் உண்பதற்கு முடியும். கைக்குத்தல் அரிசி சாப்பிடாமல் நாம் என்ன செய்கிறோம் ? நெல்லை மில்லிலே அறைத்து, பிறகு அதைத் தீட்டித் தீட்டி, ஒரு படியை அரைப்படி அளவுக்கும், ஒன்றரை ஆழாக்கு அளவுக்கும் கொண்டுவந்து விடுகிறோம். அதனால், சத்துள்ள பெரும் பகுதி வீணாக்கப்படுகிறது. நாவுக்கு அடிமைப்பட்ட காரணத்தால், ருசிக்கு அடிமைப்பட்ட காரணத்தால், உடம்பை ஆரோக்கியமாக வைத்திருக்க வேண்டும் என்ற எண்ணத்தை மறந்ததனால், மன அடக்கம் இல்லாத காரணத்தால், நாம் வாஸ்தவத்திலேயே நாட்டுக்குத் துரோகம்தான் செய்கிறோம் என்று சொல்வேன். சர்க்கார் பெரிய பெரிய அணைக்கட்டுத் திட்டங்களைத் தீட்டி, நீர்த் தேக்கங்களை ஏற்படுத்தி, தானிய உற்பத்தியைப் பன்மடங்கு பெருக்குகிறபோதும், அந்த அரசாங்கத்தைக் குறை கூறுகிற ஒவ்வொருவரும் தங்களுடைய உள்ளத்தில் கை வைத்துப் பார்க்க வேண்டும். அப்படிப் பார்த்தால், நாம் ஒவ்வொருவரும் இந்த நாட்டுக்குத் துரோகம் செய்கிறோம் என்றுதான் சொல்ல முடியும். அரசாங்கத்திற்கும், மக்களுக்கும் நன்மை செய்கிறோமா, தீமை செய்கிறோமா என்பதைப் பார்க்கின்றபோது, வாஸ்வதத்திலே—என் வரையில் நான் சொல்வேன்—ஒரு நாளைக்கு இரண்டு ஆழாக்கு கைக்குத்தல் அரிசி இருந்தால் வாழ்க்கை நடத்த முடியும். ஆனால், அதை உபயோகிக்காமல், அரிசியைத் தீட்டித் தீட்டி, அதிலுள்ள விட்டமின் சத்துக்களெல்லாம் குப்பையில் போகும்படி செய்து, மில் அரிசியாக மாற்றி உண்ணும்போது, அதிகம் பேர் சாப்பிட வேண்டிய அளவு அரிசியை மிகவும் குறைவானவர்களே உண்ணும் நிலை ஏற்பட்டு, அதன் காரணமாகப் பலருக்கு உணவு கிடைக்காத நிலை நாட்டில் நிலவுகிறது. அதனால், ரொம்பப் பேர் கஷ்டப்படுகிறார்கள். ஆகவே, மில்லிலே அறைத்துத் தீட்டிய அரிசியைச் சாப்பிடுகிறவர்கள் உண்மையிலேயே நாட்டுக்குத் துரோகம் செய்கிறார்கள் என்று தான் சொல்ல வேண்டும். நாமெல்லோரும் ஒருமனப்பட்டு, நல்ல எண்ணத்துடனே, நாடு வாழவேண்டும், மக்கள் வாழ வேண்டும், எல்லோரும் ஆரோக்கியமாக இருக்க வேண்டுமென்று வாஸ்தவத்திலே நினைக்கிறோம். ஆனால், கைக்குத்தல் அரிசியை நாட்டு மக்கள் சாப்பிடும் அளவுக்கு நிலைமையை ஏற்படுத்தாத காரணத்தால், அரசாங்கம் எத்தனை ரூபாய் கோடிக் கோடியாகச் செலவு செய்தாலும், வீடு வீடாக, திண்ணைக்குத் திண்ணை வியாதியஸ்தர்களைக் காண்கிறோம். ஆகவே, சத்துள்ள கைக்குத்தல் அரிசியையே மக்கள் சாப்பிடும் ஒரு நிலையை ஏற்படுத்துவதற்கு நாம் எல்லோரும், இங்கிருப்பவர்களும் வெளியிலே இருப்பவர்களும், பாடுபட்டுச் செயலில் கொண்டுவருவதற்குக் கடமைப்பட்டிருக்கிறோம். அப்பொழுது தான் நாட்டிலுள்ள உணவு நெருக்கடி தீர்ந்து, குறைந்த அளவு தானியத்தை நிறைந்த அளவுள்ள மக்கள் சாப்பிட்டு நோயற்று ஆரோக்கியமாக வாழ்வதற்கு முடியும் என்று தெரிவித்துக்கொள்கிறேன்.

அணைக்கட்டு கட்டிய மந்திரி அவர்களுக்கு நன்றி. மின்சாரம் என்று சொல்கிறபோது, பாதி அளவு கிராமங்களுக்கும் நகரங்களுக்கும் விநியோகிக்கப்பட்டிருக்கிறது. மற்றப் பாகங்களுக்கும் அதை விநியோகிப்பதற்குத் திட்டங்கள் வகுத்திருக்கிறோம் என்று சொல்லியிருக்கிறார்கள். அது மிக மிகப் போற்றுதற்குரியது.

கல்வியைப் எடுத்துக்கொண்டால், வாஸ்தவத்திலேயே, கல்வி அமைச்சர் அவர்களுக்கு நாம் நன்றி செலுத்தக் கடமைப்பட்டிருக்கிறோம். "பெற்றவர்கள் அறிவார்களோ பிள்ளை அருமை" என்று சொல்வதுண்டு. பகல் உணவு அளித்து, நல்லதொரு கல்வியை அளிக்கிறோம் என்று சொல்கிற நம்முடைய சர்க்காருக்குத் தலை வணங்கக் கடமைப்

பட்டிருக்கிறார்கள். நான் நகராண்மைக் கழகத்தில் இருக்கிறேன். இந்த நகரத்தில் நான் எங்கு சென்று பார்க்கும்போதும், அங்கேயெல்லாம் நல்ல முறையாகப் பகல் உணவு தயார் செய்து, பள்ளிகளிலே படிக்கும் மாணவ மாணவிகளுக்கு அளிக்கப்படுவதைக் காண்கின்ற தாய்மார்கள் எல்லோரும் சந்தோஷப்படுகிறார்கள். தங்கள் குழந்தைகள் நன்றாகப் படித்து முன்னேறுவதற்கு ஏற்ற வகையில், இப்பொழுது நல்ல பகல் உணவைக் கொடுக்கிறார்களே என்று வாயார வாழ்த்துகிறார்கள். அந்தவிதமான வாழ்த்துதலை இன்று நம்முடைய சர்க்கார் அடைந்திருக்கிறார்கள்.

அது மட்டுமல்ல. நம்முடைய சர்க்காரில் உழைக்கின்ற உத்தமர்களுக்கு, பாட்டாளிகளாகப் பாடுபடுகின்றவர்களுக்கு நம்முடைய சர்க்கார் 5–50 p.m. அக்கறை காட்டி வருகிறார்கள். மத்திய சர்க்காரின் உழைப்பாளிகளுக்கும், நம்முடைய ராஜ்ய சர்க்காரின் உழைப்பாளிகளுக்கும் கொடுக்கப்படுகின்ற சம்பள விகிதத்தைப் பார்க்கும்போது, அந்த இரண்டு விகிதங்களுக்கும் உள்ள ஏற்றத்தாழ்வைப் பார்க்கும்போது, மிகவும் வருத்தமாக இருக்கிறது. ஏனென்றால் ஒரு பெண்ணைத் திருமணம் செய்துகொடுக்க வேண்டுமென்றால், அந்தப் பெண்ணின் பெற்றோர்கள் பையனுக்கு சென்ட்ரல் கவர்ன்மெண்ட் உத்தியோகமா அல்லது நம்முடைய மாநில சர்க்கார் உத்தியோகமா என்று கேட்டுக்கொண்டு, சென்ட்ரல் கவர்ன்மெண்ட் உத்தியோகமாக இருந்தால்தான், பெண்ணைக் கொடுக்கிறார்கள். மாநில சர்க்கார் உத்தியோகஸ்தன் என்றால் " என்னுடைய பெண்ணைக் கொடுக்க முடியாது " என்று கூறிவிடுகிறார்கள். மத்திய அரசாங்கத்தில் வேலை பார்ப்பவனுக்கு நல்ல வருமானம் வருகிறது. அதே சமயத்தில், அதே உழைப்பைக் கொடுக்கின்ற நம்முடைய மாநில சர்க்கார் ஊழியர்கள் அவர்களை விட மிகக் குறைவான சம்பளம் பெற்று வருகிறார்கள். நிலச் சீர்திருத்தத்தைக் கொண்டுவரப் போகிறோம் என்று சொல்லும்போது, காந்தீயப் பாதையில் ராம ராஜ்யத்தை ஸ்தாபிக்கப் போகிறோம் என்று சொல்லும்போது, ஏற்றத் தாழ்வு அற்ற சமுதாயத்தை அமைக்கப் போகிறோம் என்று சொல்லும்போது, இந்த உத்தியோகஸ்தர்களின் ஊதியம் மத்திய சர்க்கார் சிப்பந்திகளின் ஊதியத்தை விடக் குறைவாக இருப்பது மிக மிக வருந்தத்தக்கது. இவர்களுக்கு இப்பொழுது இடைக்கால நிவாரணமாக 5 ரூபாயை நம்முடைய அரசாங்கம் தந்திருப்பது கண்டு மிக்க மகிழ்ச்சி அடைகிறேன். முதல் தேதி பிறந்தவுடன் வீட்டு பட்ஜெட்டைப் போடும்போது, கண்ணீர் விடும் காட்சியைப் பார்க்கிறேன். வறுமை அவர்களோடு பிணைக்கப்பட்டிருக்கிறது. மத்திய சர்க்கார் ஊழியர்களுக்கும் நம்முடைய சர்க்கார் ஊழியர்களுக்கும் சம்பள விகிதத்தில் வித்தியாசம் மலைக்கும் மடுவுக்கும் என்ற அளவில் இருக்கிறது. இந்த வித்தியாசங்களைப்பற்றிப் பரிசீலனை செய்வதற்காக ஒரு கமிட்டி போடப்படும் என்ற கவர்னருடைய வாசகத்தை வரவேற்கிறேன். வருஷக் கணக்காக இதைப் பரிசீலித்துக் கொண்டே இராமல், இந்த ஆண்டிற்குள்ளேயே, இன்னும் சொல்லப் போனால் இன்னும் ஓரிரு மாதங்களுக்குள்ளேயே நம்முடைய சர்க்கார் ஊழியர்களுக்கு நிவாரணம் அளிக்கப்படுவது அவசியம் என்பதை வலியுறுத்திச் சொல்ல விரும்புகிறேன். கவர்னர் பெருமான் அவர்களுடைய உரையை வரவேற்று, பாராட்டி என்னுடைய உரையை இந்த அளவோடு முடித்துக்கொள்ளுகிறேன்.

*Sri M. V. SUDARSANAM NAIDU: தலைவர் அவர்களே, இன்றைய தினம் எல்லோரும் ரொம்ப நீண்ட நேரம் பேசினார்கள். நம்முடைய ராஜ்யத்தினுடைய வருங்காலம், எதிர்காலம்பற்றியெல்லாம் கவர்னர் பெருமான் அவர்கள் தம்முடைய உரையிலே சொல்லியிருக்கிறார்கள். அந்த உரையிலே நாட்டு முன்னேற்றத்திற்கான பல விஷயங்கள் அடங்கியிருப்பதால், அதை நாம் பெருமையோடும் பூரிப்போடும் வரவேற்கக் கடமைப்பட்டிருக்கிறோம். நமது நாட்டு முன்னேற்றத்துக்குத் தேவையான காரியங்களை எல்லாம் நாம் துரிதமாக, அக்கறையோடு செய்து வருகிறோம். சென்ற பத்து ஆண்டுகளில் எவ்வளவோ முன்னேற்றத்தைக் கண்டிருக்கிறோம். ஆனால், அந்த முன்னேற்றம் போறாது என்ற குறை நம் முன்னால் இருக்கிறது. நாடு பரந்த அளவில் இருப்பதற்குத்

[Sri M. V. Sudarasanam Naidu] [9th February 1959

தகுந்தபடி பல திட்டங்களைப் போட்டால் கூட நடைமுறையில் வேலை செய்வது கொஞ்சம் கஷ்டமாக இருக்கிறது. இன்னும் 10 ஆண்டுகள் போனால் தான் நம் உழைப்பின் மிகுதி தெரியும்.

இப்பொழுது எங்கள் தென்னாற்காடு ஜில்லாவில் மழை இல்லை. மழை இல்லாத காரணத்தால், சிதம்பரம் தாலூகாவைத் தவிர மற்ற ஏழு தாலூகாக்களில் தண்ணீர் இல்லாத நிலைமை ஏற்பட்டு மக்கள் படும் கஷ்டம் சொல்ல முடியாத அளவுக்கு இருக்கிறது. கிணற்றிலிருந்து தண்ணீர் இறைத்துப் பயிர் செய்த கிராமங்களில் இருப்பவர்கள் கொஞ்சம் பலன் அடைந்திருக்கிறார்கள். மற்றவர்கள் எல்லாம் ரொம்பத் திண்டாடுகிறார்கள். மற்றவர்கள் எல்லாம், அதாவது செஞ்சி, திண்டிவனம், விழுப்புரம், கடலூர், விருத்தாசலம் ஆகிய தாலூகாக்களில் உள்ள மக்கள் ரொம்பத் திண்டாடக்கூடிய நிலை வந்துவிட்டது. மாசூல் இல்லாமல் அவர்கள் மிகவும் கஷ்டப்படுகிறார்கள். ஆகவே, அந்த இடங்களில் எல்லாம் வரி வஜா செய்ய வேண்டுமென்று கலெக்டர் அவர்கள் சிபாரிசு செய்திருக்கிறார்கள். தென்னாற்காடு ஜில்லாவில் சில பகுதிகளில் வரி வஜா செய்திருப்பதாக அறிகிறேன். நான் மேலே சொன்ன ஏழு தாலூகாக்களிலும் இந்த முறை வரி வஜா செய்வதற்கு அரசாங்கம் நடவடிக்கை எடுக்க வேண்டுமென்று கேட்டுக்கொள்கிறேன்.

தொழில் துறையில் நாம் நெய்வேலித் திட்டத்தைப்பற்றிப் பெருமைப்படுகிறோம். அந்தத் திட்டம் நல்ல முறையில் முன்னேற்றம் அடைய வேண்டும்; நல்ல முறையில் நிறைவேற்றப்பட வேண்டும் என்று இரவு பகலாகக் கஷ்டப்பட்டவர்களில் நானும் ஒருவன். நான் அந்த ஜில்லா வாசியாதலால், அவ்வப்போது பல யோசனைகளைச் சொல்லிக் காரியங்களைச் செய்தோம். அரசாங்கம் இன்று அதில் முதலீடு செய்து அருமையாக வேலை நடந்து வருகிறது. எங்கு பார்த்தாலும் ராட்சச இயந்திரங்கள் வேலை செய்துகொண்டிருக்கின்றன. பார்ப்பதற்கே பிரமிக்கத் தக்கதாக இருக்கிறது. இந்தத் திட்டத்தைப் பார்ப்பவர்கள் எல்லோரும் பிரமிக்கத்தான் செய்வார்கள். அங்கு அதைப் பார்ப்பதற்கு நூற்றுக்கணக்கான மக்கள் வருகிறார்கள் என்று பெருமையோடு சொல்லுகிறேன். அங்கு போக்குவரத்திற்காக இருக்கக்கூடிய பஸ்கள் கூடப் போதவில்லை. நாம் போடும் திட்டங்களைப் பார்ப்பதற்கு மக்களிடம் அவ்வளவு அக்கறை ஏற்பட்டிருக்கிறது. இந்தத் திட்டத்தை மேற்பார்வையிடும் ஜெனரல் சூப்பரிண்டெண்ட் ஸ்ரீமான் ஸ்ரீநிவாசன் அவர்கள் நல்ல ஆற்றல் படைத்தவர்கள். அவர்கள் நல்ல முறையில் திட்டம் நிறைவேறுவதற்காகப் பணியாற்றுகிறார்கள் என்பதைச் சொல்ல ஆசைப்படுகிறேன்.

6 p.m. அங்கு நில ஆர்ஜிதச் சட்டம் வந்து அங்கு இருந்த நிலங்களை ஆர்ஜிதம் செய்த பிறகு, அங்கு இருந்த மக்களுக்கு நஷ்ட ஈடு கொடுப்பதில் பல தொல்லைகள் இருப்பதை நீக்க நம்முடைய அரசாங்கம் தவறிவிட்டது என்றுதான் சொல்ல வேண்டியிருக்கிறது. அந்த மக்கள் பல வகைகளில் கஷ்டப்படுகிறார்கள். நிலத்தை இழந்து, வீட்டை இழந்து மிகவும் அல்லலுறுகிறார்கள். சிலர் நஷ்ட ஈட்டுத் தொகையைக் கோர்ட்டில் சென்று வாங்க வேண்டியிருக்கிறது. அது மக்களுக்குப் பெரிய கஷ்டமாக இருக்கிறது. இதற்கு அரசாங்கம் வழி வகை செய்ய வேண்டியது மிகவும் அவசியம். ஆகவே, இந்த நில ஆர்ஜித விஷயத்தில், நஷ்ட ஈடு கொடுக்கும் விஷயத்தில், அரசாங்கம், அதிலும் முக்கியமாக, ரெவின்யூ டிபார்ட்மெண்டு கவனம் செலுத்த வேண்டும். ஆர்ஜிதம் செய்தவர்களாகிய டெபுடி கலெக்டர், தாசில்தார் இவர்கள் கூடி ஆலோசித்து என்ன என்ன செய்ய வேண்டுமோ அவற்றை உடனடியாகச் செய்ய வேண்டும். முதலில் 17-வது திட்டப்படி ஆர்ஜிதம் செய்வதாக இருந்தது. ஆனால், பிறகு அதை 53-வது வருஷமாகத் திருத்தினார்கள். பிறகும் கூட, அதனால் மக்களுக்குப் பயன் இல்லை. லாபம் இல்லை. மதிப்பு இல்லை. ஆகவே, நஷ்ட ஈடு விஷயமாக, நானும், கலெக்டர், மற்றவர்களும் சேர்ந்து மக்களுக்கு வேண்டிய வசதிகளைச் செய்தும், அது போதுமானதாக இல்லை. ஆகவே, நம் அரசாங்கத்தார், உடனடியாகத் தலையிட்டு, மக்கள் கோர்ட்டில்

9th February 1959] [Sri M. V. Sudarasanam Naidu]

போய் அவஸ்தைப்படாமல் இருக்க வேண்டியதைச் செய்ய வேண்டும். கோர்ட்டில் போனால், அவர்களுக்கு சிரமம் அதிகம். வேறு வேலைகளைச் சரிவரச் செய்ய முடியாது. அவசியமானால், சட்டத்தைத் திருத்தி மக்களுக்கு நன்மை செய்ய வேண்டும்.

நம் சர்க்காரில் எல்லோருக்கும் அபரிமிதமாகச் சம்பளம் கொடுக்கிறோம். இப்பொழுது கெஜெட் பதவியில்லாதவர்களுக்கு ரூ. 5 கொடுத்திருப்பதைப் பற்றி நாம் பெருமைப்பட வேண்டும். பொருளாதார நிலை சரியாக இருந்தால், நம் சர்க்கார் அதிகமாகச் செய்யும். பல தடங்கல்கள் இருக்கின்றன. ஆனாலும், இந்த ரூ. 5 உயர்வு, சர்க்காரின் வரி வசூல்களைப் பார்த்து வரும் கிராமத்திலுள்ள கர்ணம், மணியக்காரர்களுக்குக் கிடைக்கச் செய்ய வேண்டும். அவர்கள் தங்கள் குறைகளைத் தங்கள் சங்கங்களைக் கூட்டித் தெரிவித்திருக்கிறார்கள். அது விஷயம் சீக்கிரமாகக் கவனிக்கப்பட வேண்டும். இதன் நடுவில், இந்த உயர்வுத் தொகை அவர்களுக்கும் கிடைக்கச் செய்ய வேண்டும். அவர்கள் கிராமங்களில் திருப்தியாக வேலை செய்யாவிட்டால், ஒன்றும் நடைபெறாது. இது அரசாங்கத்திற்கும் நமக்கும் நன்றாகத் தெரியும்.

இந்த நிலச் சீர்திருத்தத்தைப்பற்றிப் பல அங்கத்தினர்கள் பேசியிருக்கிறார்கள். இந்த நில தானம் வாங்குவதில் ஆசார்ய விநோபாஜி ரொம்பக் கஷ்டப்பட்டிருக்கிறார்கள். முதல் ஒன்றிரண்டு வருஷங்களில் அதிகக் கஷ்டம் இருந்தது. காட்டைக் கொடுத்தார்கள், கரம்பையைக் கொடுத்தார்கள் என்று சொன்னார்கள். இந்த விஷயத்தில், காடோ, கரம்பையோ முக்கியமல்ல. இதன் வாயிலாக ஏற்பட்ட மனமாறுதலே முக்கியமானது. ஆகவே, தானம் கொடுத்த நிலத்தின் தரத்தைக் குறித்துக் குறை கூறுவது, ஒரு குற்றமான எண்ணத்தைக் குறிக்கும் என்றுதான் நான் சொல்லிக்கொள்ள விரும்புகிறேன். ஒரு அங்குல நிலத்திற்கு, ரூ. 5,000, ரூ. 10,000 செலவழித்து வழக்காடும் மக்கள், மனமுவந்து மனமாற்றத்தின் காரணமாக, நிலம் வழங்கினார்கள் என்றால், அது சாதாரணச் சாதனையல்ல. அந்தக் காலத்தில் எப்படி மகாத்மாஜி மக்களின் மனத்தை மாற்றி சுயராஜ்யப் பாதையில் இழுத்துச் சென்றார்களோ, அதே போல் இன்று விநோபாஜி மக்களின் மனமாற்றத்தைச் செய்திருக்கிறார்கள். (சில கனம் அங்கத்தினர்கள் : மற்ற விஷயங்களைத் தாங்கள் பட்ஜெட் விவாதத்தின்போது பேசிக் கொள்ளலாம்.) பட்ஜெட் விவாதத்தின் போதா ? சரி.

இத்துடன் என் வார்த்தைகளை நிறுத்திக்கொள்ளுகிறேன்.

**DEPUTY CHAIRMAN :** The House will now adjourn and meet again at 2 p.m. to-morrow.

The House then adjourned.

## IV.—PAPERS LAID ON THE TABLE OF THE HOUSE.

* 94. *Notification issued with G.O. Ms. No. 3915, Revenue, dated 16th October 1958, regarding the withdrawal of compensation deposited in respect of certain villages transferred to Andhra State under third proviso to rule 3 of the Madras Estates (Abolition and Conversion into Ryotwari) Act, 1948. [Laid on the table under section 67 (4) of the Madras Estates (Abolition and Conversion into Ryotwari) Act, 1948 (Madras Act XXVI of 1948).]*

* 95. *Notification issued with G.O. Ms. No. 3902, Revenue, dated 15th October 1958, declaring Mahadevimangalam village as inam estate under section 4 of the Madras Estates (Abolition and Conversion into Ryotwari) Act, 1948.*

---

* Placed on the table of the House on 7th February 1959